# ஸ்ரீ சிவ அபராத க்ஷமாபண ஸ்தோத்ரம்

(குற்றங்களுக்கு மன்னிப்புக் கோருவதால் “ஸ்ரீ சிவ அபராத க்ஷமாபண ஸ்தோத்ரம்” எனப் பெயர்)

**ஆதௌ3 கர்மப்ரஸங்கா2த் கலயதி கலுஷம் மாத்ரு குக்ஷௌ ஸ்தி2தம் மாம்**
**விண்மூத்ராமேத்3ய மத்4யே க்வத2யதி நிதராம் ஜாட2ரோ ஜாதவேதா3: ।**
**யத்3யத்3வை தத்ர து3: க2ம் வ்யத2யதி நிதராம் சக்யதே கேன வக்தும்**
**க்ஷந்தவ்யோ மேऽலபராத4: சிவ சிவ சிவ போ4 ஸ்ரீமஹாதே3வ சம்போ4 ॥ 1**

முன் பிறவிகளில் செய்த வினைகளின் பயனாக தாயின் கருவை அடைந்த என்னை, மலமூத்திரங்களினால் சூழப்பட்டு, வயிற்றில் உள்ள "ஜாடராக்னி" தபிக்கச் செய்யவும், அங்கு நான் அடைந்த துன்பங்களைச் சொல்ல யாரால் முடியும்? ஆகவே, "சிவ, சிவ, சிவ, மஹாதேவ, சம்போ," என்று சொல்லுவதினால் என் குற்றங்களைப் பொறுத்தருள்வாய்.

**பா3ல்யே து3: கா2திரேகாந் மலலுலிதவபு: ஸ்தன்ய பானே பிபாஸு:**
**நோ சக்தச்சேந்த்3ரியேப்4யோ ப4வ மலஜனிதா ஜந்தவோ மாம் துத3ந்தி ।**
**நாநாரோகா3தி3 து3: காத்3ருதி3த பரவச: சங்கரம் ந ஸ்மராமி**
**க்ஷந்தவ்ய்ப்ப் மேऽபராத4: சிவ சிவ சிவ போ4 ஸ்ரீ மஹாதேவ சம்போ4 ॥ 2**

சிறுபிராயத்தில் வருத்தத்துடன் தாயின் பால் குடிக்க ஆசைப்பட்ட என் இந்திரியங்களின் அழுக்கிலிருந்து உண்டான கிருமிகள் என்னைத் துன்புறுத்துகின்றன. பல நோய்களை அடைந்து அழுகைக்கு அடிமையாகி, சங்கரனை நினைக்கவில்லை. சிவ, சிவ, சிவ, மஹாதேவா, சம்போ, என் குற்றத்தைப் பொறுத்தருள்வாய்.

**ப்ரௌடோ4ऽஹம் யௌவனஸ்தோ2 விஷயவிஷத4ரை: பஞ்சபி4ர் மர்மஸந்தௌ4**
**த3ஷ்டோ நஷ்டோ விவேக: ஸுதத4ந யுவதிஸ்வாத3 ஸௌக்2யே-**
**நிஷண்ண: ।**
**சைவே சிந்தாவிஹீனம் மம ஹ்ருத3யமஹோ மான க3ர்வாதி4ரூட4ம்**
**க்ஷந்தவ்யோ மேऽபராத4: சிவ சிவ சிவ போ4 ஸ்ரீ மஹாதேவ சம்போ4 ॥ 3**

வாலிபப் பிராயத்தை அடைந்த நான், உலக விஷயங்கள் என்னும் விஷத்தைத் தன்னுள் அடக்கிய ஐம்புலன்களினாலும் ஒவ்வொரு இடத்திலும் கடிக்கப்பட்டு விவேகத்தை இழந்துவிட்டேன். 'பிள்ளை-பொருள்-இளம் மனைவி' ஆகிய இன்பத்தில் ஈடுபட்டு. சிவபக்தியை மறந்து, அறியாமையினால் செருக்கடைந்

திருக்கும் என் குற்றங்களை சிவ, சிவ, சிவ, மஹாதேவா, சம்போ பொறுத் தருள்வாய்.

**வார்த4க்யே சேந்த்3ரியாணாம் விகலக3தி மதச்சாதி4 தை3 வாதி3தாபை:**
**ப்ராப்தைரோகை3ர்வியோகை3ர் வ்யஸனக்ருசதனோ ஞப்திஹீநம் ச தீ3னம் ।**
**மித்2யா மோஹாபி4லாஷைர்ப்ர4 மதி மம மனோ தூ4ர்ஜடேர்த்4யான சூன்யம்**
**க்ஷந்தவ்யோ மே அபராத4: சிவ சிவ சிவ போ ஸ்ரீமஹாதே3வ சம்போ4 ॥ 4**

முதுமைப் பருவத்தில் புலன்கள் வலுவிழந்து, ஆதிபௌதிகம் எனப்படும் பஞ்சபூதங்களினாலும், ஆத்யாத்மிகம் என்னும் உடலில் ஏற்படக்கூடியதும், ஆதிதைவிகம் எனும் கடவுளினால் ஏற்படக்கூடியதுமான மூன்று முறையான துயரங்களை அடைந்து, நோயுற்று, நலிவுற்று, நல்லறிவை இழந்து, தீனருக்குத் தாழ்ந்து, பொய்யான மோகத்தினால் உண்டான ஆசையில் உழன்று, சிவஞான மில்லாமலிருக்கும் என்னை சிவ, சிவ, சிவ, மஹாதேவ, சம்போ, குற்றம் பொறுத்தருள்வாயாக.

**ஸ்நாத்வா ப்ரத்யூஷ்காலே ஸ்நபநவிதி4 விதௌ4 நாஹ்ருதம் கா3ங்க3தோயம்**
**பூஜார்த2ம் வா கதா3சித்3ப3ஹுதர க3ஹனேsக2ண்டபி3ல்வீத3ளம் வா ।**
**நாநீதா பத்3மமாலா ஸரஸி விகஸிதா க3ந்த4 புஷ்பைஸ்த்வதர்த2ம்**
**க்ஷந்தவ்யோ மேsபராத4: சிவ சிவ சிவ போ4 ஸ்ரீ மஹாதே3வ சம்போ4 ॥ 5**

பிரதி தினமும் விடியற்காலையில் எழுந்து உன் அபிஷேகத்திற்கு கங்கை நீர் கொண்டுவரவில்லை. காட்டிலிருந்து உன்னைப் பூஜிக்க மூவிதழ்கொண்ட பில்வமும் கொண்டுவரவில்லை. நீர் நிறைந்த குளத்தில் பூத்து மலர்ந்திருக்கும் பூக்களாலான மாலையும், மணமுள்ள சந்தனம், புஷ்பங்கள் ஆகிய எதுவும் உனது பூஜைக்கு நான் தயார்செய்யவில்லை. சிவ, சிவ, சிவ, மஹா தேவ, சம்போ, என் குற்றங்களைப் பொறுத்தருள்வாய்.

**து3க்தை4ர்மத்4வாஜ்யயுக்தைர் த3தி4கு3ட3 ஸஹிதை: ஸ்நாபிதம் நைவ லிங்க3ம்**
**நோ லிப்தம் சந்த3நாத்3யை: கநகவிரசிதை: பூஜிதம் ந ப்ரஸூநை: ।**
**தூ4பை: கர்பூரதீ3பைர் விவித4ரஸயுதைர் நைவப4க்ஷ்யோபஹாரை:**
**க்ஷந்தவ்யோ மேsபராத4: சிவ சிவ சிவ போ4 ஸ்ரீ மஹாதேவ சம்போ4 ॥ 6**

பால், தேன், நெய், தயிர், வெல்லம் இவைகளால் சிவலிங்கத்திற்கு நான் அபிஷேகம் செய்யவில்லை. சந்தனம் முதலியவைகளால் அலங்காரமும் செய்யவில்லை. நல்ல மலர்களால் பூஜையும் செய்யவில்லை. தூபம், தீபம், கற்பூர நீராஜனம் செய்யவில்லை. உயர்ந்த சுவையுள்ள பொருட்களை நிவேதனம் செய்ய வில்லை. சிவ, சிவ, சிவ, மஹாதேவ, சம்போ, என் குற்றங்களைப் பொறுத் தருள்வாயாக.

**நோ சக்யம் ஸ்மார்தகர்ம ப்ரதிபத3 க3ஹனே ப்ரத்யவாயாகுலாட்4யே**
**ச்ரௌதே வார்தா கத2ம் மே த்3விஜகுலவிஹிதே ப்3ரஹ்மமார்கா3னு - ஸாரே |**
**தத்வேsஜ்ஞாதே விசாரை: ச்ரவண மனநயோ: கிம் நிதி3த்4யாஸிதவ்யம்**
**க்ஷந்தவயோ மேsபராத4: சிவ சிவ சிவ போ4 ஸ்ரீ மஹாதே3வ சம்போ4 || 7**

"எதைச் செய்தால் தவறிவிடுமோ என்பதால் தருமசாத்திரங்களில் சொல்லப்பட்ட கடமைகள் ஒன்றையும் நான் செய்யவில்லை. அந்தணர்களுக்கென்று சொல்லப்பட்டிருக்கும் வேதத்தில் சொல்லப்பட்ட கடமைகளின் வார்த்தை கூட என்னிடமில்லை. எங்கும் நிறைந்த பரம்பொருளை விசாரம் செய்ய அறியாமையால் கேட்பது, சிந்தனை செய்வது, அனுபவத்தில் கொண்டுவருவது இவை ஒன்றும் என்னிடமில்லை. சிவ, சிவ, சிவ, மஹா தேவ, சம்போ என் குற்றங்களைப் பொறுத்தருள்வாயாக.

**த்4யாத்வா சித்தே சிவாக்3யம் ப்ரசுரதரத4னம் நைவ த3த்தம் த்3விஜேப்4ய:**
**ஹவ்யம் தே லக்ஷஸங்க்2யைர் ஹுத வஹவத3னே நார்பிதம் பீ3ஜ - மந்த்ரை:|**
**நோ தப்தம் கா3ங்க3 தீரே வரதஜப நியமை ருத்3ர ஜாப்யம் ந ஜப்தம்**
**க்ஷந்தவ்யோ மேsபராத4: சிவ சிவ சிவ போ4 ஸ்ரீ மஹாதே3வ சம்போ4 || 8**

சிவன் எனும் மேலான செல்வத்தை மனதில் நினைத்து, அந்தணர்களுக்கு நிறையச் செல்வத்தைத் தானம் செய்யவில்லை. உன் மந்திரங்களினால் (அன்னம் நெய், சமித் முதலிய) பொருட்களை வேள்வித் தீயில் முறைப்படி லக்ஷம் ஆவ்ருத்த ஹோமம் செய்யவில்லை. கங்கைக்கரை சென்று முறைப்படி விரதம், ஜபம் செய்யவில்லை. சிவ, சிவ, சிவ, மஹாதேவ, சம்போ, என் குற்றங்களைப் பொறுத்தருள்வாயாக.

**நக்3நோ நி:ஸங்க2 சுத்3த4 ஸ்த்ரிகு3ண விரஹிதோ த்4வஸ்தமோஹாந்த4-காரோ**
**நாஸாக்3ரன்யஸ்தத்3ருஷ்டிர் விதி3தப4வகு3ணோ நைவ த்3ருஷ்ட: கதா3சித்|**
**உன்மந்யாவஸ்த3யா த்வாம் விக3தக3திமதி: சங்கரம் ந ஸ்மராமி**
**க்ஷந்தவ்யோ மேsபராத4: சிவ சிவ சிவ போ4 ஸ்ரீ மஹாதே3வ சம்போ4 || 9**

அவதூதனாகி, பற்றற்ற தூயவனாய் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் முக் குணங்கள் அற்றவனாய், அறியாமை என்னும் இருள் போக்கடிக்கப்பட்டவனாய், மூக்கின் நுனியில் வைக்கப்பட்ட கண்களை உடையவனாய், பரமேச்வரனின் குணங்களை அறிந்துபார்க்கவில்லை. உன் மநீ என்னும் நிலையை அடைந்து-புத்தியை நிலை நிறுத்தி சங்கரனை நினைக்கவில்லை. சிவ, சிவ, சிவ, மஹாதேவ, சம்போ, என் குற்றங்களைப் பொறுத்தருள்யாயாக.

**ஸ்தி2த்வா ஸ்தா3னே ஸரோஜே ப்ரணவமய மருத்கும்பி4தே ஸூக்ஷ்மமார்கே3**
**சாந்தே ஸ்வாந்தே ப்ரலீனே ப்ரகடித விப4வே தி3வ்யரூபே சிவாக்3யே ।**
**லிங்கா3க்3ரே ப்3ரஹ்மவாக்யே ஸகலதநுகதம் சங்கரம் ந ஸ்மராமி**
**க்ஷந்தவயோ மேऽபராத4: சிவ சிவ சிவ போ4 ஸ்ரீ மஹாதே3வ சம்போ4 ॥ 10**

தலையிலுள்ள ஆயிரம் இதழ்த் தாமரையில் (அல்லது ஹ்ருதய தாமரையில்) மூச்சையடக்கி ஓம் என்பதில் நின்று, அமைதியான புகழ்பெற்ற ஒளி வடிவமான சிவன் பெயரில் லிங்க ரூபத்தில் என்னை ஒடுக்கி. மஹாவாக்கியங்களில் போற்றப் பட்டு. எல்லா உயிர்களிலும் ஊடுருவி நிற்கும், சங்கரனை நான் நினைக்கவில்லை. சிவ, சிவ, சிவ, மஹாதேவ, சம்போ, என் குற்றங்களைப் பொறுத்தருள்வாயாக.

**ஹ்ருத்3யம் வேதா3ந்தவேத்3யம் ஹ்ருத3யஸாஸிஜே தீ3பதமுத்3யத்ப்ரகாசம்**
**ஸத்யம் சாந்தஸ்வரூபம் ஸகலமுனிமந: பத்3ம ஷண்டைகவேத்3யம் ।**
**ஜாக்3ரத் ஸ்வப்னே ஸுஷுப்தௌ த்ரிகு3ண விரஹிதம் சங்கரம் ந ஸ்மராமி**
**க்ஷந்தவயோ மேऽபராத4: சிவ சிவ சிவ போ4 ஸ்ரீ மஹாதே3வ சம்போ4 ॥ 11**

உயிர்களின் இதயத்தில் உள்ளதும், மறைகளின் முடிவுகளால் அறியத் தக்கதும், இதயகமலத்தில் ஒளிவிட்டு உயர்ந்து விளங்குவதும், உண்மையானதும், அமைதியை உருவமாய்க் கொண்டதும், முனிவர்களின் மனதாகிற தாமரைகளுள் அறியத்தக்க ஒரே பொருளும், விழிப்பிலும் கனவிலும் தூக்கத்திலும் முக்குண மற்று விளங்குகிறதுமான சங்கரனை நான் நினைக்க வில்லை. சிவ, சிவ, சிவ, மஹா தேவ. சம்போ, என் குற்றங்களைப் பொருத்தருள்வாயாக.

**சந்த்3ரோத்3பா4 ஸிதசேக2ரே ஸ்மரஹரே க3ங்கா3த4ரே சங்கரே**
**ஸர்பைர் பூ4ஷித கண்ட2 கர்ண விவரே நேத்ரோத்த2 வைச்வானரே ।**
**த3ந்தித்வக் க்ருத ஸுந்த3ராம்ப3ரத4ரே த்ரைலோக்யஸாரே ஹரே**
**மோக்ஷார்த2ம் குரு சித்த வ்ருத்திமமலாம் அந்யைஸ்து கிம் கர்மபி4: ॥ 12**

பிறைச் சந்திரனை தலையில் உடையவரும், காமனை எரித்தவரும், கங்கையை சடையில் கொண்டவரும், உலகத்திற்கு நன்மை செய்கிற சங்கரரும், பாம்புகளால் அலங்கரிக்கப்பட்ட கழுத்து காதுகளையுடையவரும், மூன்றாவது கண்ணில் நெருப்பை உடையவரும், யானைத் தோலாகிற ஆடையை அழகாய் அணிந்தவரும் மூவுலகிற்கும் ஸாரமான பொருளாய் விளங்குகிற ஹரனான பரமேச்வரனிடத்தில் மோக்ஷத்தை அடைய வேண்டி மாசற்ற உள்ளத்தால் எண்ணவேண்டும். வேறு கர்மாக்களால் என்ன பயன்?

**கிம் யானேன த4னேன வாஜிகரிபி4:: ப்ராப்தேன ராஜ்யேன கிம்**
**கிம் வா புத்ரகலத்ரமித்ரபசுபி4: தே3ஹேன கே3ஹேன கிம் ।**
**ஜ்ஞாத்வைதத் க்ஷண ப4ங்கு3ரம் ஸபதி3 ரே த்யாஜ்யம் மனோ தூ3ரத:**
**ஸ்வாத்மார்த2ம் கு3ருவாக்யதோ ப4ஜ ப4ஜ ஸ்ரீ பார்வதீ வல்லப4ம் ॥ 13**

தேர், செல்வம், குதிரை, யானைகள், அரசு இவைகளை அடைவதால் என்ன பயன்? பிள்ளை, மனைவி. தோழன், பசுக்கள், அழகான உடல், வீடு இவைகளாலும் எனன பயன்? ஏ, மனமே இவைகள் ஒரு கணத்தில் அழியக்கூடியவை என் உணர்ந்து, தூர விலக்கி, உன் ஆத்மா கடைத்தேற மௌனமாய், பார்வதியுடன் கூடிய பரமேச்வரனை குரு உபதேசத்தால் வழிபடுக, வழிபடுக.

**பௌரோஹித்யம் ரஜநிசரிதம் க்3ராமணீத்வம் நியோகே3**
**மாடா2பத்யம் ஹ்யந்ருத வசனம் ஸாக்ஷிவாத3: பராந்தம் ।**
**ப்3ரஹ்மத்3வேஷ: க3லஜனரதி: ப்ராணிநாம் நிர்த3யத்வம்**
**மாபூ4 தே3வம் மம பசுபதே ஜன்ம ஜன்மாந்தரேஷு ॥ 14**

புரோகிதராயிருப்பது, இரவில் தவறான காரியங்களைச் செய்வது (திருடுதல் போன்றது), மணியம் பார்ப்பது, உத்தரவுக்குக் கீழ்ப்படிவது, மடத்தின் தலைவரா யிருப்பது, பொய்ச்சாக்ஷி சொல்வது, பிறர் வீட்டில் சாப்பிடுவது, அந்தணனிடத்தில் வெறுப்பு, கெட்டவர்களுடன் சேர்க்கை, உயிர்களிடத்தில் தயவில்லாமலிருப்பது இவைகள் எதுவொன்றும் இந்தப் பிறவியிலோ மறுபிறவிகளிலோ பசுபதியான பரமேச்வரனே! எனக்கு உண்டாகவேண்டாம்.

**ஆயுர்நச்யதி பச்யதாம் ப்ரதிதி3னம் யாதி க்ஷயம் யௌவனம்**
**பரத்யாயந்தி க3தா: புனர்ந தி3வஸா: காலோ ஜக3த்3பக்ஷக: ।**
**லக்ஷ்மீஸ்தோயரங்க3 ப4ங்கசபலா வித்3யுச்சலம் ஜீவிதம்**
**தஸ்மான்மாம் சரணாக3தம் கருணயா த்வம் ரக்ஷ ரக்ஷாது4னா ॥ 15**

பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே தினமும் ஆயுள் முடிகிறது. யௌவனமும் அழிந்துகொண்டே போகிறது, சென்ற நாட்கள் திரும்பிவருவதில்லை. காலமானது உலகை விழுங்கி விடுகிறது. செல்வமும் கடல் அலை வந்து போவது போல் நிலையற்றது. இந்த வாழ்க்கை மின்னல் தோன்றி மறைவது போலப் போய்விடும். ஆகையால் உன்னைச் சரணடைந்த என்னை நீ கருணையுடன் இப்பொழுதே காப்பாற்றவேண்டும்.